22nd September 1961]

**Sri M. KALYANASUNDARAM** : திருச்சி ஜில்லாவில், மார்ச்சு மாதத்திலிருந்து நியாய விலைக் கடைகள் மூடப்பட்டிருக்கின்றன. அதற்குக் காரணம் என்ன ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : சென்ற மே மாதத்தில் நான் கலெக்டர் அவர்களோடு பேசிக் கொண்டிருந்தபோது, அவர்கள் இப்போது வாங்குவார் இல்லை என்று சொன்னார்கள். அப்போது அந்தக் கடைகளை மூடாமல், திறந்து வைப்பதில் என்ன பயன் ?

**Sri N. MARUDACHALAM** : ஸார், சில நியாய விலைக் கடையில் சொந்தக்காரர்கள், தானியங்களை கள்ள மார்க்கெட்டில் விற்று வருகிறார்கள். அப்படி விற்றவர்களை கோர்ட்டிலே கொண்டுவந்து நிறுத்தினால், அவர்கள்மேல் நடவடிக்கை எடுக்கப்பட்டிருக்கிறதா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : கள்ள மார்க்கட்டில் விற்றதாகத் தகவல் கிடைத்தால், பரிசீலனை செய்து தக்க நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

*Plantations—Lease of forest lands for*

* 1719 *Q.*—**Sri V. K. KOTHANDARAMAN** : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) நமது ராஜ்யத்தில் எத்தனை ஏக்கரா நிலம் தேயிலை, காப்பி முதலியவைகளை பயிரிட வாடகைக்கு விடப்பட்டுள்ளது ?

(இ) எந்த ஆண்டு வரை வாடகைக்கு விடப்பட்டுள்ளது ?

(உ) அதை ரத்து செய்து சர்க்காரே எடுத்து ரப்பர், பாக்கு முதலியவைகளை பயிரிட உத்தேசமுண்டா ?

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : (*a*) An area of 28·21 acres for cultivation of coffee and another area of 96·11 acres for combined cultivation of coffee and plantain had been leased out in Madurai North (Forest) Division. No forest land has been leased out for cultivation of tea.

(*b*) Out of the 28·21 acres leased out for cultivation of coffee, the lease in respect of 0·71 acre expired on 31st December 1953 and the lease of 27·50 acres to the Coffee Board would expire on 2nd February 1985. Out of the 96·11 acres leased out for combined cultivation of coffee and plantain, the lease in respect of an area of 8·50 acres would expire on 31st December 1967 while the leases in respect of the remaining area are reported to have expired during the period from 1953 to 1955.

(*c*) No, Sir.

**Sri K. PONNIAN** : தலைவர் அவர்களே, அந்நிய நாட்டுச் செலாவணிக்கு மிகவும் உகந்த தேயிலை, காப்பி, ஏலம் போன்ற பயிர்களை பயிரிடுவதற்குத் தனிப்பட்ட முறையில் சர்க்காரை அணுகினால், நிலங்கள் லீசுக்கு விடுவதில் சர்க்காரின் அபிப்பிராயம் என்ன என்று அறிய விரும்புகிறேன்.

**The Hon. Sri M. BHAKTAVATSALAM** : அந்த இடங்களுடைய தகுதியையெல்லாம் பார்க்க வேண்டும். பார்த்து அது கவனம் செலுத்தப்பட்டு வருகிறது. இதைப்பற்றித் தனியாக கேள்வி கேட்டால், விவரமாக பதில் அளிக்கப்படும்.

[22nd September 1961

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், வருடம் ஒன்றுக்கு என்ன வாடகை ? அப்படி எத்தனே வருஷம் வரையிலே அதற்கு அக்ரிமெண்டு கொடுக்கப்பட்டு இருக்கிறது ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இது எந்தெந்த வருஷத்திலே எக்ஸ்பயர் ஆனது என்பதை இப்போது குறிப்பிட்டேன். அதிலே இன்றைக்கு காபி போர்டுக்கு ஆராய்ச்சி செய்வதற்காக நிலம் கொடுக்கப்பட்டிருக்கிறது. என்னென்ன வாடகை என்பதற்கு இப்போது என்னிடத்திலே தகவல் இல்லே.

*Pulses—Shortage of*

* 1720 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether there is any shortage of pulses in this State; and

(*b*) if so, the steps taken to import more pulses?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) There was some shortage of pulses in this State during May-June 1961.

(*b*) The shortage of pulses was due to non-availability of bookings and due to restriction in the allotment of wagons for transport from the supplying centres in the Punjab, Uttar Pradesh and other Northern States. The Government of India have been moved to allot the requisite number of wagons. They have since replied that metre gauge specials are being arranged from the Northern Railway to the Southern Railway as far as possible.

SRI N. K. PALANISAMI : In spite of these measures, there is still deficit of pulses in the State. So, will the Government take suitable steps to import more pulses into this State?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : The Government have been looking into this matter. I cannot admit that there is shortage of pulses which are available in this State. But it is true that pulses have to come from North India.

*Prohibition*

DEPUTY SPEAKER : Questions 1721 and 1722 may be taken up together.

* 1721 *Q.*—SRI A. A. RASHEED : Will the Hon. the Minister for Home be pleased to state—

(*a*) whether the Government have asked the Union Government for compensation for the loss in revenues due to the introduction of prohibition; and

(*b*) if so, the reply received thereon?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (*a*) No, Sir.

(*b*) Does not arise.